Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 420212 4 பக்கம் விலை 45 காசு

**லட்சியம்**

சமதர்மம் என்ற உயர்ந்த இலட்சியத்தின்படி சமுதாயம் திருத்தி அமைக்கப்பட வேண்டும்.




# அண்ணா




**நாகரிகம்**

ஒருவன் தான் விரும்பும் நலன்கள் அனைத்தும் பிறருக்கும் உண்டாகச் செய்வதுதான் நாகரிகம்.






மலர்: 7 சென்னை 18-5-83 புதன் வெளியீடு 19-5-83 வியாழன் இதழ் 208

## புலித்தேவன் பதில்கள்

**கேள்வி:**
பன்றி எதிரில் வந்தால் ஒதுங்கிப் போக வேண்டும் என்று கருணாநிதி அடிக்கடி கூறுகிறார். ஏன் எப்போது பார்த்தாலும் கருணாநிதி எதிரில் பன்றியே வருகிறது?

**பதில்:**
இனம் இனத்தைத் தேடி வருகிறதோ என்னவோ தெரியாது.

**கேள்வி:**
கழகத்தில் கருத்து வேறுபாடு இருப்பதாக கருணாநிதி சொல்கிறாரே?

**பதில்:**
எதிர் வீட்டு ஆண் பிள்ளையைப் பார்த்து ஒட்டு மீசை வைத்துக் கொண்டு நெய் தடவி முறுக்கேற்றுகிறார். பாவம், போகட்டும்.

**கேள்வி:**
அரசியலிலிருந்து புரட்சித்தலைவர் விலக வேண்டும் என்று தி.மு.க. தலைவர் விரும்புகிறாரே!

**பதில்:**
பூவும் பொட்டோடு இருப்பவளைப் பார்த்து விதவை பழிப்பது நல்லதல்ல.

**கேள்வி:**
தீண்டாமை பற்றி தந்தை பெரியார், டாக்டர் அம்பேத்கார் ஆகியோரின் கருத்து என்ன?

**பதில்:**
தீண்டாமை ஒழிய வேண்டும் என்றார் பெரியார். தீண்டினால் தீட்டில்லை என்று கருதப்படும் சாதியில் சேர வேண்டும் என்றார் அம்பேத்கார்.

**கேள்வி:**
எதிர்க்கட்சிகளின் தேவையற்ற போராட்டத்தை மக்கள் ஆதரவுடன் சந்திப்பேன் என்று புரட்சித்தலைவர் கூறியதை கருணாநிதி கண்டிக்கிறாரே?

**பதில்:**
மக்களைக் கொண்டு சந்திப்பேன் என்று மக்கள் திலகம் கூறுகிறார். இரும்புக்கரம் கொண்டு நசுக்குவேன் என்று அன்று கருணாநிதி சொன்னார்.

**கேள்வி:**
சட்டமன்றம் பெரிதா? நீதிமன்றம் பெரிதா?

**பதில்:**
மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் இயற்றும் சட்டங்களுக்கு விளக்கமும் வியாக்யானமும் பெற்று தீர்ப்பு வழங்குவது நீதிமன்றம் இதில் எது பெரிது சிறிது என்பதற்கு இடமில்லை.

**கேள்வி:**
இந்தியில் புலமை பெற்றிருந்தால் அறிஞர் அண்ணா தேசியத் தலைவராகி இருப்பாரா?

**பதில்:**
அறிஞர் அண்ணாவின் ஆங்கிலப் புலமைக்கு அவரை உலகத் தலைவராக அல்லவா ஏற்க வேண்டும்.

**கேள்வி:**
கடவுள் உண்டா இல்லையா எனக் கேட்டால் பாரதிதாசனும், அறிஞர் அண்ணாவும் சொன்னதை கருணாநிதி சொல்கிறாரே, பெரியார் சொன்னதை ஏன் சொல்லவில்லை?

**பதில்:**
நல்ல கேள்வி. வீரமணியைக் கேளுங்கள்.

# நுழைவுவரி பிரச்னையில் கருணாநிதியின்
# இரட்டை வேடம்
## செல்வி ஜெயலலிதா தாக்கு

கோவை, மே 18- நுழைவுவரி பிரச்னையில் புதுவைக்கு ஒரு நிலையும் தமிழகத்துக்கு ஒரு நிலையும் எடுத்து கருணாநிதி இரட்டைவேடம் போடுகிறார் என்று கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா கூறினார்,

உதகை அண்ணா திடலிலும் குன்னூரிலும் நடைபெற்ற பிரும்மாண்டமான கழகக் கூட்டங்களில் கலந்து கொண்டு சிந்தனைச் செல்வி ஜெயலலிதா பேசுகையில் கூறியதாவது:-

நீங்கள் எனக்களித்த அன்பான வரவேற்புக்கு மனம் கனிந்த உளம் நிறைந்த நன்றியைக் காணிக்கையாக்கிக் கொள்கிறேன். நான் இதற்கு முன் பல தடவை ஊட்டிக்கு வந்துள்ளேன். திரைப்படத்தில் நடிப்பதற்காகவும் உறவினர்களுடனும் வந்துள்ளேன். கழக கொள்கை பரப்புச் செயலாளராகப் பொறுப்பேற்ற பின் நான் இங்கு வருவது இதுதான் முதல் தடவை. நீங்கள் இங்கு எனக்கு அளித்த அன்பான வரவேற்பு கண்டு ஏதோ புதிய உலகில் காலடி எடுத்துவைப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது.

### எதிர்க்கட்சி எதிரிகட்சியாக செயல்படுவதா?

உங்களை சந்திக்கக் கூடிய வாய்ப்பை உருவாக்கித் தந்த கழகத்துக்கும் புரட்சித்தலைவருக்கும் என் நன்றியை காணிக்கையாக்குகிறேன்.

நாட்டிலே பரபரப்பாக பேசக்கூடிய நுழைவுவரி பெரிய வியாபாரிகளிடம் சிறிய சலசலப்பை ஏற்படுத்தியிருக்கிறது. கழக அரசு எதைச் செய்தாலும் எதிர்ப்பது என்ற அடிப்படையில் தி.மு.க. செயல்படுகிறது. எதிர்க்கட்சியாக தி.மு.க. செயல்படும் என்று எதிர்பார்த்தோம், ஆனால் தி.மு.க. எதிரிகட்சியாக செயல்படுகிறது.

67 லட்சம் குழந்தைகளுக்கு இலவச சத்துணவு வழங்கும் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தை முதல்வர் புரட்சித் தலைவர் கொண்டு வந்து வெற்றிகரமாக செயல்படுத்தி வருகிறார். அனைத்து மக்களும் ஏகோபித்து வரவேற்கின்றனர். ஆனால் இதில்கூட கருணாநிதி குற்றம் காண்கிறார்.

### கதை அளக்கும் கருணாநிதி

சென்னைக்கு நிரந்தர குடிநீர் வழங்கக்கூடிய கிருஷ்ணா நதிநீர் திட்டத்தை முதல்வர் புரட்சித் தலைவர் கொண்டு வந்துள்ளார். பிரதமரே இந்ததிட்டத்துக்கு வாழ்த்துத் தெரிவித்தார், ஆனால் கருணாநிதியோ புரட்சித் தலைவர் ஏமாந்து விட்டார் என்று கதை அளக்கிறார்,

நுழைவுவரியை எதிர்ப்பவர்கள் யார்? சிறுவியாபாரிகளா எதிர்க்கிறார்கள். இல்லை. புகையிலை சிமெண்டு, வனஸ்பதி போன்ற பொருட்களை விற்பனை செய்யும் மொத்த வியாபாரிகளே எதிர்க்கிறார்கள்.

நுழைவு வரி ஏழைகள் அன்றாடம் பயன படுத்தும் பொருட்களுக்கா விதிக்கப்பட்டுள்ளது? இல்லை இதனால் சிறு வியாபாரிகளோ ஏழை நடுத்தர மக்களோ எந்த விதத்திலும் பாதிக்கப்படவில்லை,

பெரிய வியாபாரிகள் நடத்திய அர்த்தால் தோல்வி அடைந்தது. இதை நாம் கூறவில்லை. இந்து எக்ஸ்பிரஸ் போன்ற ஏடுகளே படம் பிடித்துக் காட்டியுள்ளன.

பெற்றனர். சிறிய வியாபாரிகள் பங்கு பெறவில்லை என்று கூறுகிறது.

தஞ்சை மாவட்டத்தில் கருணாநிதி ஆட்சியின் போது விவசாயிகள் போராட்டம் நடத்திய போது போராட்டத்தை அடக்குவேன் என்று கூறியவர் கருணாநிதி.

### மைய அரசு பாராட்டு

இந்தியாவிலேயே விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச தினக்கூலி வழங்கப்படுவது தமிழ்நாட்டிலும், பஞ்சாபிலும் தான் இங்குதான் அது அமுல்படுத்தப்பட்டு வருகிறது.

மைய அரசு நிர்ணயித்த கூலியைவிட தமிழகத்தில் அதிக கூலி தரப்படுகிறது. இந்தக் கூலி தருவதைக் கண்காணிக்க ஒரு தாசில்தார்களை நியமித்தது தமிழக அரசுதான் என்று மத்திய தொழிலாளர் நல அதிகாரி புரட்சித் தலைவர் அரசுக்குப் பாராட்டுத் தெரிவித்துள்ளார்.

### உழைப்பவர் அரசு

உண்மையான மகிழ்ச்சி என்பது உழைக்கும் பாட்டாளி மக்களுக்கு மகிழ்ச்சி தரக்கூடிய வாழ்வை தருவதுதான் என்று ரஷ்ய அறிஞர் ஒருவர் கூறியுள்ளார். புரட்சித் தலைவர் அரசு அந்த வகையில் செயல்படுகிறது

கருணாநிதி ஆட்சியின் போது தொழிலாளர் வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன அப்போது 20 வேலை நிறுத்தங்களை சட்ட விரோதம் என அறிவித்து கருணாநிதி தடை விதித்தார். திருச்சியில் மின் தொழிலாளர்கள் போராட்டம் நடத்திய போது அவர்கள் மீது அடக்கு முறையை ஏவினார். முதலாளிகளையும், நிலப்பிரபுக்களையும் காக்க காவலர்களை பாதுகாப்புக்காக நியமித்தார்.

இன்று விவசாயிகளுக்காக போராட முன் வந்துள்ள கருணாநிதி பழையதை நினைத்துப் பார்க்கவேண்டும்.

கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதாவுக்கு ஊட்டி கழகக்கூட்டத்தில் பொன்னாடை போர்த்தப்பட்டது

கூட நுழைவு வரி விதிக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தில் விதிக்கப்பட இருக்கும் நுழைவு வரியால் பெட்டிக்கடை வைத்திருப்போர், சிறிய வியாபாரிகள் எந்த விதத்திலும் பாதிக்கப்படவில்லை. இதுகருணாநிதிக்கும் தெரியும் தெரிந்திருந்தும் ஏன் போராட்டம் என்கிறார் என்று நீங்கள் கேட்கலாம் பெரிய நிலப் பிரபுக்களுக்கோ பெரிய வியாபாரிகளுக்கு கடுகளவு பாதிப்பு என்றால் கூட கருணாநிதிக்கு பொறுக்காது.

புதுவையில பாமர மக்கள், ஏழைகள் பயன் படுத்தும பொருட்கள் மீதெல்லாம் நுழைவு வரி விதிக்கபடுகிறது. புதுவையிலே நீக்கி விட்டு இங்கே வந்து போராடுங்கள் இல்லை எனில் மக்கள் கைகொட்டி சிரிப்பார்கள்.

நுழைவு வரியை எதிர்த்து மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியினர் இங்கே போராட்டம் என்கிறார்கள். இவர்கள் ஆளக்கூடிய மேற்கு வங்கத்தில் மருந்துக்கு கூட 6 சதவீதம் நுழைவுவரி விதிக்கப்படுகிறது. மேற்குவங்கத்தில் ரத்து செய்துவிட்டு இங்கே வந்து போராடுங்கள்,

நுழைவுவரியை ரத்து செய்யமுடியாது என்று மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசு திட்டவட்டமாகக் கூறிவிட்டார். வருவாய்க்கு மாற்றுவழி காணாது நுழைவு வரியை ரத்து செய்ய முடியாது என்று மாநிலங்களவை விவாதத்தின் போது மேற்கு வங்க மார்க்சிஸ்ட் உறுப்பினர் நிர்மல் சந்த சட்டர்ஜி கருத்து தெரிவித்தார். நுழைவு வரியை ரத்து செய்வதனால் மைய அரசு

இழப்பீடு தரவேண்டுமென்று கூறினார்.

நுழைவு வரி பற்றி முதலமைச்சர்கள் மாநாட்டில் நுழைவு வரியை கைவிடமுடியாது என்று போர்க்கொடி உயர்த்தியவரே ஜோதிபாசுதான்.

### உங்களுக்கு ஒரு நீதி? எங்களுக்கு ஒரு நீதியா?

இந்திரா காங்கிரஸ் ஆளக்கூடிய குஜராத். அரியானா, ஒரிசா பஞ்சாப், ராஜஸ்தான் இங்கெல்லாம் நுழைவு வரி இருக்கிறது ஏன் பிரதமரின் மாநிலமான உத்தரப் பிரதேசத்தில் கூட நுழைவு வரி இருக்

2-ம் பக்கம் பார்க்க

### முதல்வர் தலைமையில் அமைச்சரவை கூட்டம்

சென்னை, மே 18— முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் தலைமைச் செயலகத்தில் அமைச்சரவைக் கூட்டம் நடந்தது.

இக்கூட்டத்தில் அமைச்சர்களும் மற்றும் தலைமைச் செயலாளர் பொறுப்பில் உள்ள கே. சொக்கலிங்கமும் பங்கேற்றனர்.

## கருணாநிதியின் போக்கை எதிர்த்து
## 1 எம்.பி. - 4 எம்.எல்.ஏ. தி.மு.க. விலிருந்து
# ராஜினாமா

சென்னை, மே 18- தென்னாற்காடு மாவட்ட தி.மு.க. செயலாளர் தேர்தலில் கருணாநிதி போக்கை எதிர்த்து ஒரு எம்.பி., நான்கு எம்.எல்.ஏக்கள் தி.மு.க.விலிருந்து விலக முடிவு செய்துள்ளனர்.

தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களிலும் தி.மு.க. செயலாளர்களாக தனது எடுபிடிகளே வர வேண்டுமென்று திட்டமிட்டு கருணாநிதி வேலை செய்ததும், அவரது இந்தப் போக்கை எதிர்த்து சென்னை, மதுரை உட்பட பல மாவட்டங்களில் தி.மு.க. முக்கிய பிரமுகர்களும், ஆயிரக்கணக்கான தொண்டர்களும் தி.மு.கவுக்கு முழுக்குப் போட்டது தெரிந்ததே

அந்த நிலைமை இப்போது தென்னாற்காடு மாவட்டத்திலும் ஏற்பட்டிருக்கிறது

தென்னாற்காடு மாவட்ட தி.மு.க. செயலாளர் தேர்தல் கடந்த 15-ந்தேதி கடலூரில் நடந்தது இத்தேர்தலில் கருணாநிதியின் எடுபிடியான செஞ்சி ராமச்சந்திரன் என்பவரும் முன்னாள் எம் எல் ஏவான முட்டம் கிருஷ்ணமூர்த்தியும் போட்டியிட்டனர் செஞ்சி ராமச்சந்திரன் வெற்றி பெற கருணாநிதி ஏற்பாடு செய்தாராம்.

தனது முன்னாள் எடுபிடியான சா கணேசன் என்பவரை அங்கு தேர்தல் அதிகாரியாக கருணாநிதி நியமித்தார்,

15ந்தேதி நடைபெற இருக்கும் தேர்தலுக்கு 13ந்தேதியே சா கணேசன் பாண்டிச்சேரிக்கு சென்றுவிட்டார் அங்கு அவரை செஞ்சி ராமச்சந்திரன் கோஷ்டியினர் சந்தித்து 'சாக்கட்டி' 10ஓட்டுசீட்டுக்களில் தேர்தல் அதிகாரியான அவரது கையெழுத்தை வாங்கிக்கொண்டார்களாம்.

மறுநாள் தேர்தல் நடந்தது. இதில் ஒரு வேடிக்கை நடந்தது பதிவாக வேண்டிய மொத்த ஓட்டுக்களே 180 தான். ஆனால் 182 ஓட்டுக்கள் பதிவானது பாண்டிச்சேரியில் வைத்து தேர்தல் அதிகாரி சா. கணேசன் கொடுத்ததாகக் கூறப்படும் சீட்டுகள் தான் அதிகப்படியான அந்த ஓட்டு சீட்டுகள் என்று கூறப்படுகிறது.

பதிவான 182 ஓட்டுகளில் செஞ்சி ராமச்சந்திரனுக்கு 93 ஓட்டுக்களும், முட்டம

2 ம் பக்கம் பார்க்க

### ஏடுகள் கணிப்பு

இந்து ஏடு என்பது கழக ஏடு அல்ல, அந்த ஏடு அர்த்தால் பற்றி ஞாயிற்றுக் கிழமை விடுமுறை தினம் என்பதால் அன்று மட்டும் கடைகள் ஓரளவு மூடியிருந்தன மற்றபடி அர்த்தால் தோல்வி அடைந்ததாக அந்தப் பத்திரிக்கை கூறுகிறது

எக்ஸ்பிரஸ் ஏடு இந்த அர்த்தாலில் பணக்கார வியாபாரிகளே பங்கு

### வைக்கோலுக்கு வரி விதிக்கும் புதுவை அரசு

பாண்டிச்சேரியில் தி.மு.க இந்திரா காங்கிரஸ் கூட்டணி ஆட்சி நடைபெறுகிறது. அங்கு மாட்டுத்தீவனம், வைக்கோலுக்குக் கூட நுழைவு வரி உள்ளது. நாம அதுபோலா செய்துள்ளோம்? புதுவையில் அரிசி, பருப்பு எண்ணெய் போன்ற பொருட்களுக்கு



குன்னூர் பொதுக்கூட்டத்தில் செல்வி ஜெயலலிதாவின் பேச்சைக் கேட்கத் திரண்டிருந்த மக்கள் வெள்ளத்தின் ஒருபகுதி.

# செல்வி ஜெயலலிதா முழக்கம் [ முதல் பக்கத் தொடர்ச்சி ]

கிறது. ஆனால் இங்கு நுழைவு வரியை ரத்து செய்ய வேண்டும் என்று இந்திரா காங்கிரஸ்காரர் கூறுகிறார்கள். உங்களுக்கு ஒரு நீதி? எங்களுக்கு ஒரு நீதியா?

இந்திரா காங்கிரஸ் ஆட்சி செய்யும் மாநிலங்களில் எந்தக் காரணத்திற்காக நுழைவு வரி விதிக்கப்படுகிறதோ, அதே காரணத்திற்காகத்தான் தமிழகத்திலும் நுழைவுவரி விதிக்கப்படுகிறது.

நுழைவுவரி விதிக்கப்படுவதற்கு மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசு என்ன காரணம் கூறுகிறாரோ அதைத்தான் நாமும் கூறுகிறோம்.

விற்பனை வரியை வேண்டுமானால் உயர்த்திக் கொள்ளுங்கள் என்று பெரிய வியாபாரிகள் தூது விடுகின்றனர்.

பெரிய வியாபாரிகள் தூது என்றவுடன் ஜெயலலிதாவிடம் பெரிய வியாபாரிகள் தூது என்று எதிர்க்கட்சிப் பத்திரிகைகள செய்தி வெளியிட்டாலும் வெளியிடலாம். அது தமிழக அரசுக்குத் தான்.

நுழைவுவரியை எதிர்த்துப் போராட்டம் நடத்த கருணாநிதி 8 கட்சிகளை அழைத்து 14-ந் தேதியன்று பேசினார். மீண்டும் 31-ந் தேதி கூடிப் பேசுகிறார்களாம். ஏன் இந்த நீண்ட இடைவெளி? போராட்டத்திற்கு தான் இந்த இடைவெளி. விற்பனை வரி என்றால் கட்டுகிறோம் என்கிறார்கள் வியாபாரிகள். நுழைவு வரி என்றால் கட்ட மறுப்பது ஏன்? நுழைவு வரி என்றால் கணக்கு வைக்க வேண்டும் அதை ஒட்டி வருமான வரி வேறு கட்ட வேண்டும்.

## இதுஎன்ன நியாயம்?

வரி போட்டால் ஒரு பக்கம் வரி போடாதே என்கிறார்கள் மறுபக்கம் வறட்சி நிவாரணப் பணியைச் செய் என்கிறார்கள் தமிழகத்திற்கும், மேற்கு வங்கத்திற்கும் மைய அரசு போதிய வறட்சி நிவாரண நிதி தரவில்லை. நாமே நிதியை பெருக்க பெரிய வியாபாரிகள் மீது நுழைவு வரி போட்டால் போடாதே என்பது என்ன நியாயம்?

தமிழகத்தைப்போன்றே மேற்குவங்கம், ஒரிசா போன்ற மாநிலங்கள் கூட வறட்சிக்குள்ளாகியுள்ளன. வறட்சி நிவாரணப் பணிகளை தமிழகம் தவிர வேறு எந்த மாநிலமாவது இந்த அளவிற்கு (தமிழகம் செய்துள்ள அளவிற்கு) செய்துள்ளது என்று காட்ட முடியுமா? இதை நான் சவாலாகவே கூறுகிறேன்.

வறட்சிநிதியாக ரூ.210 கோடி தாருங்கள் என்று நாம் கேட்டோம். ஆனால் அவர்கள் கொடுத்ததோ ரூ63 கோடி தான்.

கடும் வறட்சி நிலவும் இத்தருணத்திலும் கூட தமிழகத்தில் மலிவு விலையில் அரிசி கிடைக்கிறது.

## கருணாநிதி ஆட்சியில் நிலை என்ன?

கருணாநிதி ஆட்சிக் காலத்தில் படி அரிசி 10 ரூபாய் அளவுக்கு கூட விற்கப்பட்டது. கடும் வறட்சியிலும் கழக ஆட்சியில் நியாய விலையில் அரிசி கிடைக்கிறது.

தமிழகத்தில் மட்டும் தான் நியாய விலைக் கடைகள் மூலம் பொருட்கள் ஒழுங்காக விநியோகிக்கப்படுகின்றன என்று மைய அரசே பாராட்டுகிறது.

16 ஆயிரம் ரெவின்யூ கிராமங்களில் 17 ஆயிரத்துக்கும் மேற்பட்ட நியாய விலைக்கடைகள் மூலம் அரிசி மண்ணெண்ணெய் போன்ற அத்தியாவசியப் பொருட்கள் விநியோகிக்கப்படுவதன் மூலம் ஒரு கோடியே 19 லட்சம் குடும்பங்கள் பயனடைந்து வருகின்றன.

கடந்த மார்ச் மாதம் 4 ஆயிரம் டன் அரிசியை மைய அரசு தமிழகத்துக்கு

ஒதுக்கியதைப் புரட்சித்தலைவர் மேற்கொண்ட முயற்சியின் பயனாக ஏப்ரல் மாதம் 15 ஆயிரம் டன் கோதுமையை அனுப்பியது. இந்தமாதம் 20 ஆயிரம் டன் கோதுமையை அனுப்புவதாக கூறியுள்ளார்கள்.

வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ள பல மாநிலங்களில் மின் பற்றாக்குறை காரணமாகப் பல கிராமங்கள் இருட்டுகளாக இருளில் மூழ்கி கிடக்கின்றன. அங்கே ஏற்பட்டுள்ள வறட்சிக்கு அந்த அரசை குறை கூறுவதில் என்ன பயன்?

கோடைக் காலத்தில் விலைவாசி உயர்வு என்பது இயற்கை விலைவாசி உயர்வுக்கு பணக்கார வியாபாரிகள் தான் காரணம். நியாய விலைக் கடைகள் இல்லை என்றால் எந்த அளவுக்கு விலைவாசிகள் உயர்ந்திருக்கும் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்,

8 கட்சிகள் கருணாநிதியுடன் சேர்ந்து போராடப் போகிறார்களாம்! அரசியலில் நிரந்தர எதிரியும் இல்லை, நிரந்தர நண்பனும் இல்லை.

உடன்பாடு என்பது ஒரு கட்சியின் அடிப்படைக் கொள்கைகளை பாதிக்காத வகையில் இருக்க வேண்டும். பிரிவினை வாதம் பேசக் கூடிய தி.மு.க வுடன் காங்கிரஸ் கூட்டு சேரக் கூடாது என்று எதிர்ப்பு தெரிவித்து காங்கிரசை விட்டு வெளியேறியவர் தான நெடுமாறன் இன்று அவர் கருணாநிதி தலைமையில் போராடப் போகிறாராம். இது நியாயம தானா?

இந்தியக் கம்யூனிஸ்டு கட்சியும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டு கட்சியும் உழைப்பாளர்களுக்காக போராடுபவர்கள் என்று கூறுபவர்கள் பணக்கார வியாபாரிகளுக்கு ஆதரவு திரட்டும் கருணாநிதியிடம உறவு கொள்வது நியாயம் தானா என்று எண்ணிப்பார்க்க வேண்டும் 8 கட்சிகளுக்கு கருணாநிதி தலைமையை ஏற்க கூடிய பரிதாப நிலையா ஏற்பட்டு விட்டது.

கருணாநிதிக்கு தன் கட்சிக்காரர் மீது நம்பிக்கை இல்லை அதனால்தான் மற்றகட்சிகள் தயவை நாடிச் சென்றுள்ளார் அகில உலக அரசியல் பேசும் கம்யூனிஸ்டு கட்சிகள் கோபாலபுரத்துக்கு கொள்கை வகுப்பது.

செலம் மே தினக் கூட்டத்தில் பேசுகையிலேயே நான் கூறினேன். இந்திரா காங்கிரஸ் உறவை நாங்களாக முறிக்க மாட்டோம் அவர்களே முறித்துக் கொண்டு போனால் போகட்டும் என்று கருணாநிதி செய்திருக்கிறார். அடுத்து அவர் 10 கட்சிகளை நாடி சென்றாலும செல்லலாம என்றேன்.

## பணமுதலைகட்கு வாலாட்டும கருணாநிதி

10 கட்சி கூட்டணியினர் தங்களுக்கு கை கொடுக்க வறட்சியை நம்புகின்றனர். கருணாநிதி பணக்காரர்களை நம்புகிறார். ஆனால் புரட்சித் தலைவரோ மக்களை நம்புகிறார்.

தமிழ்ப்புத்தாண்டு வாழ்த்துச் செய்தியில் புரட்சித்தலைவர் நான் நம்பியிருப்பது மக்களைத்தான் என்று தெளிவாகக் கூறியுள்ளார். தேர்தல் கால வாக்குறுதிகளையும், தேர்தல் காலத்தில் கூறாத சத்துணவு திட்டம் போன்றவற்றை நிறைவேற்றி வஞ்சகர்களுக்கு ஒருவருக்குத் தான் என்று புரட்சித்தலைவர் உருக்கமாகக் கூறினார்.

இவை வெறும் சொற்களல்ல உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து வந்த சொற்கள் ஆகும். மக்களின் வாழ்த்தைத்தான் புரட்சித்தலைவர் தன் வலிமையாகக் கருதுகிறார். புரட்சித்தலைவர் அண்ணாவின் இதயக்கனி அனைத்து மக்களின் அன்புக்கனி.

வறுமைக் கோட்டிற்கு கீழ்வாழும் ஏழைகளின் சார்பில் மக்கள் கருத்தாலும் கரத்தாலும் எங்கள் வீட்டுப்பிள்ளை என்று புரட்சித்தலைவரை உரிமை கொண்டாடுகிறார்கள்.

அந்த ஏழை பற்றி புரட்சித்தலைவர் சிந்திக்கிறார். அதனால் எழுந்தது தான் வீட்டுக்கு ஒரு விளக்குத் திட்டம். புரட்சித்தலைவர் அரசு ஏழை மக்கள் அரசு, தாய்மார்கள் அரசு.

ஏமாற்று அரசியல் வாழ்வு நடத்துபவர்களிடமிருந்தும் வறட்சியை வைத்து அரசியல் நடத்தலாம என்று எண்ணுபவர்களிடமிருந்தும் இந்த அரசைக் காப்பது உங்கள் கடமை,

இவ்வாறு சிந்தனைச் செல்வி ஜெயலலிதா பேசினார்.

கழகக்கொள்கைபரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா பேசிய உதகை கூட்டத்திலும், குன்னூர் கூட்டத்திலும் மக்கள் வெள்ளமெனத் திரண்டு செல்வி ஜெயலலிதாவின் பொன்னுரை கேட்டனர்.

உதகை அண்ணா திடலில் நடைபெற்ற கழகக் கூட்டத்திற்கு கோபால் தலைமை வகிக்க சிந்தனைச்செல்வி ஜெயலலிதா, ஜனார்த்தனம் எம்.எல்.சி., உச்சி எம். எல். ஏ., செய்யாறு தேவராஜ் அமீது, ஆனந்த் மற்றும் பலர் பேசினர். சுப்பிரமணி நன்றி கூறினார்.

## குன்னூர் கூட்ட விவரம்

குன்னூர் டாக்சி ஸ்டாண்ட் அருகே நடந்த கழகக் கூட்டத்திற்கு இரா. சனார்த்தனம் எம்.எல்.சி. தலைமை வகித்தார். சிந்தனைச் செல்வி ஜெயலலிதா, போ. கோபால், உச்சி எம். எல். ஏ. மற்றும் பலர் பேசினர் எல். மணி நன்றி கூறினார்.

## மாடி எங்கும் மக்கள்

குன்னூரில் செல்வி ஜெயலலிதாவின் பேச்சைக் கேட்க தாய்மார்களும், பெரியவர்களும் ஏராளமாக வந்திருந்தனர், குன்னூர் டாக்சி ஸ்டாண்டை சுற்றியுள்ள சாலைகளிலும், மார்க்கெட் சாலையிலும் மக்கள் வெள்ளம் நிரம்பி வழிந்தது, சுற்றியிருந்த கட்டிடங்கள் மாடி வீடுகளிலெல்லாம் மக்கள் வெள்ளம் நிரம்பி வழிந்தது, தாய்மார்கள் கைக் குழந்தைகளுடன் வந்திருந்து செல்வி ஜெயலலிதாவின் பேச்சை ஆர்வமுடன் கேட்டனர். மாடி வீடுகளில் பெண்கள் திரண்டிருந்தனர், முன்னதாக செல்வி ஜெயலலிதா இரு விரல்களைக் காட்டி தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தார், மக்களும் இரு விரல்களைக் காட்டி மகிழ்ச்சித் தெரிவித்தனர்.

---

# தி. மு. க. வினர் ராஜினாமா

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கிருஷ்ணமூர்த்திக்கு 88 ஓட்டுகளும் கிடைத்தன ஒரு ஓட்டு செல்லாது என்று அறிவிக்கப் பட்டது

உள்ள ஓட்டுகளுக்கு மேல் அதிகமாக ஓட்டு பதிவாகி திருட்டுத்தனம் அம்பலமாகி விட்டதால் இந்தத் தேர்தல் முடிவு அறிவிக்கப்படவில்லை

செஞ்சி ராமச்சந்திரன் வெற்றி பெற்றதாக அறிவிக்க கருணாநிதி பகீரத பிரயத்னம் செய்து வருகிறார், ஆனால் முட்டம் கிருஷ்ணமூர்த்தி கோஷ்டியினர் மறு தேர்தல் நடத்த வேண்டும என்றுவிடாப்பிடியாக வற்புறுத்தி வருகின்றனர் மறுதேர்தல் நடத்தாமல் செஞ்சி ராமச்சந்திரன் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டால் நாங்கள் கட்சியிலிருந்து விலகுவோம் என்று மாவட்ட முக்கிய தி.மு.க. பிரமுகர்கள் கையெழுத்திட்டு கருணாநிதியிடம் கடிதம் கொடுத்திருக்கின்றனர்.

சிதம்பரம் குழந்தைவேலு எம்.பி. நெல்லிக்குப்பம் கிருஷ்ணமூர்த்தி எம்.எல்.ஏ. வானூர் முத்துவேல எம்.எல். ஏ. விழுப்புரம் பழனியப்பன எம். எல. ஏ, காட்டுமன்னார்குடி ராமலிங்கம் எம். எல். ஏ., முன்னாள் எம்எல்ஏக்களான முட்டம் கிருஷ்ணமூர்த்து விருத்தாசலம் செல்வராஜ் ஆகியோர் அந்தக் கடிதத்தில் கையெழுத்திட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

இவர்கள் அனைவரும் நேற்று காலையிலேயே சென்னைக்கு வந்து தி மு க சட்டமன்ற கட்சி அலுவலகத்தில முகாமிட்டுள்ளனர்

இந்தப் பிரச்னையில் எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்ட கருணாநிதி, என்ன முடிவெடுப்பது என்பதுபற்றி அன்பழகன் சாதிக்பாட்சா, ஆகியோருடன் நேற்றும் இன்றும தொடர்ந்து ஆலோசனை நடத்தி வருகிறார்

---

சென்னைக்கு

# 25-ந் தேதி பிரதமர் இந்திரா வருகை

சென்னை, மே 18— சென்னை நேரு விளையாட்டு அரங்கில் 25 ந் தேதி மாலை நடக்கஉள்ள கிருஷ்ணா நதிநீர் திட்ட விழாவில் பங்கேற்க பிரதமர் இந்திராகாந்தி 25ந் தேதி பிறபகல் 2 40 மணிக்கு விமானம் மூலம் வருகிறார்.

இந்த விழாவில் முதல்வர் புரட்சித் தலைவரோடு ஆந்திர முதல்வர் என், டி, ராமாராவ், மகாராஷ்டிர முதல்வர் வசந்தராவ் பட்டீல் கர்நாடக முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டே ஆகியோரும பங்கேற்கிறார்கள்

கிருஷ்ணா நதி திட்டத் திறகாக முதல் கட்டமாக, தமிழகத்தின் சார்பில் ஆந்திர முதல்வர் என். டி. ராமாராவிடம் இந்த விழாவில 30 கோடி ரூபாய் அளிக்கப்படுகிறது.

---

‘அண்ணா’வில் விளம்பரம் செய்து பயன் பெறுங்கள்

---

7 லட்சம் விவசாயிகட்கு நன்மை

# பால் கொள்முதல் விலையை உயர்த்த அரசு உத்திரவு

சென்னை, மே 18- தமிழ்நாட்டில் பால் கொள்முதல் விலையை லிட்டருக்கு 30 காசில் இருந்து 45 காசு வரை உயர்த்த அரசு தீர்மானித்துள்ளது.

இந்த விலை உயர்வு இம்மாதம் 15 ந் தேதி முதல் அமுலுக்கு வருகிறது.

பாலின் கொள்முதல் விலையை உயர்த்தி அரசு வெளியிட்டுள்ள செய்திக் குறிப்பில் கூறப்பட்டுள்ளதாவது.

விவசாயிகளில்பால் உற்பத்திச்செலவு அதிகரித்து இருப்பதை ஈடுகட்ட பால் கொள்முதல் விலையை உயர்த்த அரசு முடிவு செய்தது.

பல்வேறு கூட்டுறவு உற்பத்தியாளர்கள் ஒன்றியத் தலைவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கவும், விவசாய உயர்மட்ட ஆலோசனைக்குழுவில் ஆலோசனை படியும இந்த முடிவு செய்யப்பட்டது

இதன் மூலம் கூட்டுறவு சங்கங்களுக்குபால் வழங்கும் சுமார் 7 லட்சம் விவசாயிகளுக்கு பயன் கிடைக்கும் என்று அரசு பத்திரிகை குறிப்பு தெரிவித்துள்ளது.

---

# ஓடும் ரெயிலில் பெண்ணிடம் நகை பறிப்பு: வாலிபர் கைது

சென்னை, மே 18— திருவள்ளூரிலிருந்து சென்ட்ரல் ஸ்டேஷன் நோக்கி வந்து கொண்டிருந்த மின்சார ரயிலில் கடந்த15-ந்தேதியன்றுஒரு இளம் பெண்ணிடமிருந்து 3 ஆயிரம ரூபாய் மதிப்புள்ள நகையை பறித்து விட்டு பல வாலிபர்கள ஓடிவிட்டனர் இதுபற்றிய விவரமாவது!—

## ரெயிலில் பயணம்

உஷாராணி என்ற 18 வயது பெண் திருவள்ளூரிலிருந்து சென்ட்ரல வரும ரயிலில் பயணம செய்தார் அவர் பயணம் செய்த பெட்டியில பல ஆசாமிகள் மூவர் பயணம செய்தனர் அவர்கள கொரட்டூர் அருகே ரயில் வந்து கொண்டிருந்த போது 3 ஆசாமிகளும திடீரென்று அந்தப்பெண மீது பாய்ந்து அவர் அணிந்திருந்த ரூ.3 ஆயிரம மதிப்புள்ள நகையை பறித்து சென்று விட்டனராம

இது குறித்து அந்தப் பெண பெரம்பூர் ரயிலவே நிலையத்தில் புகார் செய்தார், புகாரை யொட்டி சப் இன்ஸ்பெக்டர் சுப்பிரமணியம தலைமையில் குழு அமைக்கப்பட்டது இந்தக் குழு அம்பத்தூர் ரயில் நிலையத்தில் சந்தேகபடும்படியாக உலவிக் கொண்டிருந்த வாலிபர் ஒருவரை கைது செய்து விசாரித்தது,

விசாரணையில் அவர் பெயர் ஏசு என்பதும மூலக் கொத்தளத்தை சேர்ந்தவர் என்பதும மேலும் இருவருடன் சேர்ந்து உஷாராணியிடம் நகையை பறித்ததும தெரியவந்தது.

போலீசார் தொடர்ந்து விசாரணை நடத்தி வருகின்றனர்.

---

தலைமைக் கழக அறிக்கை எண்: 59/83

# சென்னை மாவட்டம் பெரம்பூர் பகுதி கழகத் தோழர்களுக்கு..!

கழகத்திலிருந்து நீக்கி வைக்கப்பட்டிருந்த, சென்னை மாவட்டம் பெரம்பூர் பகுதியைச் சேர்ந்த

எஸ். கிருஷ்ணசாமி
(44-வது வட்ட செயலாளர்)
பி. ஏ. சுபரன்
(44-வது வட்ட துணைச் செயலாளர்)

ஆகியோர் தங்கள் செயலுக்கு வருந்தி, தங்களை மீண்டும் கழகத்தில் இணைத்துக் கொள்ளவேண்டுமென்று நேரிலும், கடிதம் மூலமும் விடுத்த வேண்டுகோளை ஏற்று அவர்கள் இன்றுமுதல் கழகத்தில் இணைந்து பழைய பொறுப்புக்களிலேயே பணியாற்ற அனுமதிக்கப் படுகிறார்கள்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச் செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

என். ராசாங்கம்

சென்னை—14, அமைப்புச் செயலாளர்
18-5-83. அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

---

தலைமைக் கழக அறிக்கை எண்: 58/83

# சென்னை மாவட்டம் தி. நகர் பகுதி கழகத் தோழர்களுக்கு...

கழகத்திலிருந்து நீக்கிவைக்கப்பட்டிருந்த, சென்னை தி. நகர் பகுதி 110-வது வட்ட அவைத் தலைவர்,

எம். ஜி. ஜெயராமன்

தனது செயலுக்கு வருந்தி தன்னை மீண்டும் கழகத்தில இணைக்கக் கோரி நேரிலும் கடிதம் மூலமும் விடுத்த வேண்டுகோளை ஏற்று அவர் இன்று முதல் கழகத்தில் இணைந்து பழைய பொறுப்பிலேயே பணியாற்ற அனுமதிக்கப்படுகிறார்,

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு ப.உ.ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

என். ராசாங்கம்

சென்னை-14 அமைப்புச்செயலாளர்
18-5-83 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

---

Published by K, Kaviraian on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029
Editor: C. PARASURAMAN

## மாவட்ட, ஒன்றிய நகர, கழக செயலாளர்கள், சிறப்பு பேச்சாளர்கள் கவனத்துக்கு

ஜூன் 9ந் தேதி முதல் 15ந் தேதி வரை தலைமைக்கழகத்தின் சார்பில் நடைபெறவுள்ள சாதனை விளக்க தொடர் கூட்டங்களில் எந்தெந்த பேச்சாளர்கள் எந்தெந்த ஊர்களில் உரையாற்றுகிறார்கள் என்ற அறிவிப்பு அண்ணா நாளிதழில் தொடர்பட்டியலாக தினமும் வெளியிடப்படுகிறது. அதன்படி நாடாளுமன்ற-சட்டமன்ற - சட்ட மேலவை-உறுப்பினர்கள் தலைமைக் கழக பேச்சாளர்கள் ஆகியோர் ஜூன் 9ந் தேதி முதல் 15ந் தேதி வரை ஏற்கனவே ஒப்புக் கொண்ட நிகழ்ச்சிகளை ஒத்தி வைக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்

ஜூன் 9ந் தேதி முதல் 15ந் தேதி வரை தலைமைக்கழகம் அறிவிக்கும் இடங்களில் தான் அவர்கள் கூட்டங்களில் கலந்து கொள்ளவேண்டும்.

அந்தந்த ஒன்றிய நகர கழக செயலாளர்களும் தலைமைக்கழகம் வெளியிடுகின்ற அறிவிப்பின்படி, அறிவித்த பேச்சாளர்களோடு தொடர்பு கொண்டு கூட்டங்களை நடத்த வேண்டும்.

அதே தேதிகளில் ஏற்கனவே வேறு பேச்சாளர்கள் கலந்து கொள்ளும் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்திருந்தால் அவற்றை ஒத்தி வைத்து தலைமைக் கழகம் அறிவிக்கும் பேச்சாளர்களை வைத்தே ஜூன் 9-ந்தேதி முதல் 15-ந் தேதி வரை கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து நடத்திட வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

-ஜெயலலிதா

சென்னை—14 கொள்கை பரப்புச் செயலாளர்
18-5-83 அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்

---

## மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

**அஞ்சல் வழி தொடர் கல்வித்துறை**
**திறந்தவெளிப் பல்கலைக் கழகத் திட்டம்**
**திறந்தவெளிப் பல்கலைக் கழகப் பட்ட முன்படிப்புத் திட்டம்**
(நிறுவனம் 1977)

### அனுமதி அறிவிப்பு

இந்தியா முழுவதிலுமுள்ள தமிழ் எழுதப் படிக்கத் தெரிந்த மாணவர்கள் இத்திட்டத்தில் சேரலாம். போதனை அஞ்சல் வழி நடைபெறும். பயிற்சி மொழி தமிழ் மட்டுமே.

படிப்புத்திட்ட நிலைகள்: அறிமுகநிலை, தொடக்க நிலை, அடிப்படைநிலை.

**அ. அறிமுகநிலை: (ஆறு மாதங்கள்)**

சேரத்தகுதி: கல்வித்தகுதி எதுவும் தேவையில்லை 14 வயது அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் இதில் சேரலாம், தேர்வு கிடையாது.

**ஆ. தொடக்கநிலை: (ஒரு வருடம்)**

சேரத்தகுதி: 8-ஆம் வகுப்புத் தேர்ச்சி அல்லது அறிமுகநிலைப பூர்த்தி.

**அறிமுக நிலையிலும், தொடக்க நிலையிலும் பாடங்கள்:**

மொழிகள் (கட்டாயம்) தமிழ், ஆங்கிலம்.
விருப்பப் பாடங்கள்—: (ஏதேனும் மூன்று) கணிதம், பொது விஞ்ஞானம், வரலாறு, பொருளியல், அரசியல், புவியியல், வணிகவியல்.

**இ. அடிப்படை நிலை: (இரண்டு வருடங்கள்)**
**சேரத் தகுதி:**

முதலாண்டு: 10-ம் வகுப்பு தேர்ச்சி அல்லது தொடக்கநிலை தேர்ச்சி.

இரண்டாமாண்டு: மெட்ரிக் தேர்ச்சி, புகுமுக வகுப்பு தேர்ச்சியின்மை, அல்லது அடிப்படைநிலை முதலாம் ஆண்டுத் தேர்ச்சி, அல்லது 11-ம் வகுப்புத் தேர்ச்சி. பூர்த்தி (Completed) விருப்பப்பாடம் (Elective) மட்டும் தேறாமை.

**அடிப்படைநிலைப் பாடங்கள்:**

மொழிகள் கட்டாயம் :— தமிழ், ஆங்கிலம்.
விருப்பப்பாடங்கள் ஏதேனும் மூன்று —கணிதம், வரலாறு, பொருளியல், அரசியல், புவியியல், வணிகவியல், கணக்கியல், வங்கியியல், உளவியல்.

முக்கியக் குறிப்பு: புகுமுக வகுப்பு நிலையில் ஏதேனும் பிரிவு அல்லது பிரிவுகள் அல்லது பாடங்களைப் பாக்கி வைத்திருக்கும் பழைய புகுமுக வகுப்பு மாணவர்கள், அவ்வாறு பாக்கியுள்ள பிரிவு அல்லது பிரிவுகள் அல்லது பாடங்களை மட்டும், திறந்த வெளிப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து, தேர்வில் எழுதிப் புகுமுக வகுப்பைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். பிரிவு III இல் அவர்கள், திறந்தவெளிப் பல்கலைக் கழகம் வழங்கும் கலையியல் பிரிவையோ அல்லது பாடத்தையோ தெரிவு செய்து கொள்ள வேண்டும்.

இத்திட்டத்தில் ஒரு முழு ஆண்டை நிறைவு செய்த மாணவர்கள், தேவைப்பட்டால், விருப்பப் பாடங்களை மாற்றிக் கொள்ளலாம்.

அறிமுகநிலை, தொடக்கநிலை
அடிப்படை நிலை முதலாண்டு ரூ. 10/- (ரூபாய் இரண்டாம் ஆண்டு விண்ணப்பம் பத்து மட்டும்)

**விளக்கமும் விண்ணப்பமும் வேண்டுவோர் கவனிக்க:**

கோரிக்கையுடன் பாரத ஸ்டேட் பாங்கின் எந்தக் கிளையிலாவது இத்தொகையினை ரூ. 10/- (ரூபாய் பத்து மட்டும்) அஞ்சல்வழிக் கணக்கில் செலுத்தியதற்கான சலானை [Chelan] அல்லது மதுரை காமராசர் பல்கலைக்கழக அஞ்சல்வழி தொடர் கல்வித்துறை நெறியாளர் பெயரில் எந்த ஷெட்யூல் வங்கியிலாவது செலுத்தப்பட்டதற்கான டிமாண்ட் டிராப்டை இணைத்து திறந்தவெளிப் பல்கலைக் கழகத் துணை நெறியாளரிடமிருந்து (Deputy Director Open University, Madurai Kamaraj University, Madurai – 625 021) விளக்கத்தையும் விண்ணப்பப் படிவத்தையும் பெற்றுக் கொள்ளலாம்.

பார்வையற்றோர், காதுகேளாதார், பேசும் திறனற்றோர்க்கும் பயிற்சிக் கட்டணச்சலுகை உண்டு.

அஞ்சல் ஆணைகளும், பணவிடைகளும், ரொக்கமும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

விண்ணப்ப படிவம் பதிவு அஞ்சலில் அனுப்பப்படும்.

செய்தி மடல் (Bulletin) தேவைப்படுவோர்க்கு இலவசமாக அனுப்பப்படும்.

பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பங்களை ஏற்றுக் கொள்ள கடைசி நாள் 31—7—1983.

நெறியாளர்.

---

சென்னிமலையில் சென்டெக்ஸ நாச்சிமுத்து மேன்சனை மத்திய அமைச்சர் ஆர். வெங்கடராமன் திறந்து வைத்தார். அமைச்சர் முத்துசாமி இந்நிகழ்ச்சியில் பங்கேற்றார்.

---

### அமைச்சர் எஸ் டி. எஸ். தகவல்:

# கள்ளச்சாராயத்தை ஒழிக்க தமிழகம் முழுவதும் பறக்கும்படை

**சென்னை. மே 18- தமிழகத்தில் கள்ளச் சாராயம் காய்ச்சுதல் கள்ளக கடத்தல் முதலியவற்றை தடுக்க பறக்கும் படைகள் அமைக்கப்பட்டுள்ளது.**

அதில் ஒரு துணை ஆட்சியர் தலைமையில் இருவட்ட ஆட்சியாகள், இரு துணை வணிக வரி அலுவலர்கள் ஆகியோர் இருப்பார்கள்.

சென்னை எழிலகம் திட்டக்குழு கூட்டு மன்றத்தில் அமைச்சர் எஸ். டி. எஸ். தலைமையில் பறக்கும்படை பயிற்சி முகாம் நிறைவு விழா நடை பெற்றது.

இதில் சிறப்பு ஆணையர் மற்றும், வருவாய் நிர்வாக ஆணையர் மதுவிலக்கு மற்றும் ஆயத்துறை செயலாளர் ஆகியோர் கலந்து கொண்டனர்.

தமிழகத்தை 8 பகுதிகளாக பிரித்து ஒவ்வொரு பிரிவிற்கும் ஒரு துணை ஆட்சியாளர், ஒருதுணை வணிகவரி அதிகாரிகள் ஆகியோர் நியமிக்கப் படுவார்கள்.

சென்னைசெங்கல்பட்டு தென்னாற்காடு மாவட்டங்களுக்கு சென்னையை தலைமையிடமாக கொண்டு இரண்டு பறக்கும் படைகளும், வட ஆற்காடு மாவட்டத்திற்கு ஒன்றும், சேலம், தாமபுரி மாவட்டங்களுக்கு சேலத்தில் ஒன்றும், கோவை, பெரியார் உதகமண்டலம் ஆகியவற்றிற்கு கோவையில் ஒன்றும அமைக்கபபடும்.

### விளக்கம்

அதே போல் மதுரை, ராமநாதபுரம்மாவட்டங்களுக்கு மதுரையிலும், தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை மாவட்டங்களுக்கு தஞ்சையிலும் திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களுக்கு திருநெல்வேலியிலும பறக்குமபடைகள் நியமிக்கபபடும்.

அநத பறக்கும் படை அலுவலர்களுக்கு பயிற்சியின் போது சாராயக் கலவை ஆலை, அயல்நாட்டு இந்திய மது பானங்கள் தயாரிப்பு ஆலை மொத்தவிற்பனை நிலையங்கள், சில்லரை விற்பனை நிலையங்கள், வடிசாலைகள் மற்றும சர்க்கரை ஆலைகள் நேரில் காண்பிக்கப்பட்டு அதன் நடைமுறைகள் குறித்து விளக்கப்பட்டது

இநத பயிற்சி முகாம் நிறைவுவிழாவில் அமைசசர் எஸ். டி. எஸ், கலநது கொண்டார், அபபோது அவர் கூறியதாவது:

பறக்கும் படை அலுவலர்கள் மிகுந்த விழிப்புடன் கலால் சட்டங்களை மீறி செயலபடும் தவறுகளைப் பற்றிய செய்திகளை சேகரித்து ரகசிய ஏற்பாடுகள் செய்து திடீர் சோதனை நடத்தவேண்டும்.

கள்ளச்சாராயம் காய்ச்சுதல், கடத்துதல், விற்பனை செய்தல், மது வகைகளை ஆயத்தீர்வை கட்டாமல உரிமம இல்லாமலும் வெளிமாநிலங்களிலிருந்து கள்ளத்தனமாக கடத்துவது, மற்றும போன்ற சமூக விரோத செயல்களை முறியடிக்க வேண்டும். அதன் மூலம் அரசுக்கு கலால் துறையின் மூலமாக வரக்கூடிய வருமானத்தை அதிகரிக்க வேண்டும் அதே சமயத்தில் வரி ஏய்ப்புகளை கண்டுபிடித்து தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினார்.

---

சென்னையில்

இரட்டை பஸ்

## அமைச்சர் முத்துசாமி ஓட்டினார்

சென்னை, மே, 18— இந்தியாவிலேயே முதன் முதலாவதாக இரட்டை பஸ் சென்னையில் இன்று ஓடத்துவங்கியது.

பல்லவன் போககுவரத்து கழகத்தைச் சேர்ந்த இந்த பஸ்ஸை அமைச்சர் முத்துசாமி துவக்கி வைத்தார். முதன் முதலில் அவரே இந்த பஸ்ஸை ஓட்டிச் சென்றார்.

இந்திரா நகர்-பாரீஸ் வழித்தடத்தில் ஓடும இந்த பஸ் 15 75 மீட்டர் நீளமும 2 49 மீட்டர் அகலமும் கொண்டது ஆகும.

இரண்டு பிரிவுகளைக் கொண்ட இந்த இரட்டை பஸ்சில் ஒரு பகுதியில் இருந்து மறுபகுதிக்கு செல்ல வசதி செய்யபபட்டுளளது.

---

## 3 ஆயிரம் போலி ரேஷன் கார்டுகள்

சென்னை, மே 18— சென்னை நகரில் அதிகாரிகள் நடத்திய திடீர் சோதனையால் 3 ஆயிரம் போலி குடும்ப அட்டைகள் கண்டு பிடிககப்பட்டன.

நுகர் பொருள் வாணிப கழக அதிகாரிகளும் அரசின் உணவுத்துறை அதிகாரிகளும் போலி குடும்ப அட்டைகளைக் கண்டு பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டபோது இவை கண்டுபிடிக்கப்பட்டன.

இந்தப் போலி குடும்ப அட்டைகளுக்கு உணவுப் பண்டங்கள் வழங்குவதை நிறுத்தி வைத்துள்ளனர்.

## ஜனாதிபதி சுற்றுப் பயணம் ரத்து

சென்னை. மே, 18— தமிழ்நாட்டில் 5 நாட்கள் ஜனாதிபதி ஜைல்சிங் சுற்றுப்பயணம் செய்வதாகஇருந்தார். இப்போது அவரது சுற்றுப்பயணம் ரத்து செய்யப்பட்டுள்ளது.

19ம் தேதியில் இருந்து 23ம் தேதி வரை சுற்றுப் பயணம் செய்வதாக அறிவிக்கப்பட்டு இருந்தது.

தமிழ்நாட்டில் ஜனாதிபதி சுற்றுப்பயணம் முழுவதும் ரத்து செய்யப்பட்டுள்ளதாக அரசு அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

---

### வறட்சி நிவாரணம்

## வனப்பாதுகாப்புக்கு ரூ. 1.1 கோடி: அரசு ஒதுக்கீடு

**சென்னை, மே 18. வறட்சி நிவாரணப் பணிகளை ஒட்டி வனப்பாதுகாப்பு திட்டங்களுக்கு ரூ 1.1 கோடியை தமிழக அரசு ஒதுக்கியிருக்கிறது.**

1983-84-ம் ஆண்டுக்கு பல்வேறு திட்டங்கள் போடப்பட்டுள்ளன.

தமிழ்நாட்டில்ஏற்பட்டு இருக்கும் கடுமையான வறட்சியை சமாளிக்க கழக அரசு பல்வேறு திட்டங்களை போர்க்கால அடிப்படையில் செய்து வருகிறது.

வேலை வாய்ப்பு திட்டங்கள் மற்றும்பல அபிவிருத்தி திட்டங்கள் செயல் படுத்தப்பட்டு வருகின்றன.

வறட்சி நிவாரணப் பணிகளில் ஒரு கட்டமாக வனப்பாதுகாப்பு திட்ட வேலை நடைபெறுகின்றன.

1983—84 ம் ஆண்டிற்காக இதற்கு அரசு ரூ. 1.1 கோடி ஒதுக்கீடு செய்துள்ளது.

வனத்துறை தலைமை அதிகாரி இந்ததிட்டத்தை தந்துள்ளனர்.

சாலை ஓரங்களில் மரங்கள் நடுவது இதில் ஒரு பகுதி திட்டமாகும்.

---

# 20 ஆயிரம் ஆடுமாடுகளின் அணிவகுப்பை நடத்த இருந்த தலைவர் பூனாவில் கைது

பூனா, மே 18— இருபதாயிரம் ஆடு மாடுகள் 2 ஆயிரம் மாட்டு வண்டிகளின அணிவகுப்பை நடத்தப்போவதாக அறிவித்திருந்த விவசாய சங்கத்தலைவர் பூனாவில கைது செய்யப்பட்டுள்ளார்.

இவரது பெயர் ஷரத் ஜோஷி. ஷெட்காரி சங்கடனா என்ற அமைப்பின் தலைவர்.

விவசாயத் தொழிலாளர்களுக்கும் பால் பண்ணை தொழிலாளர்களுக்கும் ஊதிய உயர்வு வேண்டும என்று கோரி இருந்தார்.

இதை வற்புறுத்த கலெக்டர் அலுவலகம் நோக்கி 20 ஆயிரம் ஆடு மாடுகள் 2 ஆயிரம் மாட்டு வண்டிகள் கொண்ட பெரிய அணிவகுப்பை நடத்தப்போவதாக அறிவித்துஇருந்தார்

இந்த அணிவகுப்பை நடத்த மாவட்ட ஆட்சி தலைவர் தடைவிதித்து இருக்கிறார்,

அந்த அணிவகுப்பை நடத்த திட்டமிட்டு இருந்த ஷரத்ஜோஷியை போலீசார் கைது செய்துள்ளனர்.

---

நாகர்கோவில்

## வானொலி நிலையம் 2 மாதத்தில இயங்கும்

திருநெல்வேலி, மே 18— நாகர்கோவில் வானொலி நிலையம் இன்னும் இரண்டு மாதங்களில் இயங்கத் தொடங்கும் என்று தென்மண்டல வானொலி தலைமைப் பொறியாளர் சங்கரன் தெரிவித்தார்.

தமிழகத்தில் மாவட்ட அளவில் அமையும் 6-வது வானொலி நிலையம் நாகர்கோயில் நிலையம்.

30 கிலோ மீட்டர் பரப்பளவில் இந்த வானொலி இயங்கும்.

ஆரம்ப காலத்தில் மாலையில் மட்டும் ஒலி பரப்பு செய்யும்.

---

## பொதுப்பணித்துறை

**காவிரி வளர்ச்சிப் பணிகள் வட்டம்**

**தஞ்சாவூர்**

### ஒப்பந்தப்புள்ளி அறிவிப்பு

தமிழ்நாடு ஆளுநரின் சார்பாக பொதுப்பணித் துறை காவிரி வளர்ச்சிப் பணிகள் வட்டம், தஞ்சாவூர் கண்காணிப்புப் பொறியாளரால், கீழ்க்கண்ட வேலைக்கு 14.6.83 அன்று மாலை 3.30 மணி வரையில் (அலுவலக கடிகார நேரப்படி) மூடி முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப் புள்ளிகள் பெற்றுக்கொள்ளப்படும் ஒப்பந்தப்புள்ளிகள் அன்று மாலை 3-30 மணி அளவில் (அலுவலக கடிகார நேரப்படி) ஒப்பந்தக்காரர்கள் அல்லது அவர்களால் நியமிக்கப்பட்ட பிரதிநிதிகள் முன்னிலையில் கண்காணிப்புப் பொறியாளரால் திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | முன் வைப்புத் தொகை | ஒப்பந்தப் புள்ளியின் அட்டவணை விலை | ஒப்பந்தப் புள்ளி அட்டவணைக்குரிய தொகையை சேர்ப்பிக்கும் அலுவலரின் பெயர் |
|---|---|---|---|---|
| 1 | தஞ்சாவூர் மாவட்டம் சீர்காழிவட்டத்தில் புது மண்ணியாறு பிரிவு எ2. கோவிந்தகாவிரி வாய்க்காலின் கிளை பி.1வாய்க்கால் தொலைக்கல் 3.00 கி.மீ முதல் 4.50 கி.மீ வரை பக்க சறுக்கைகட்டுதல் | ரூ 4,600/ | ரூ 50/ விற்பனை வரி மற்றும் சர்சார்ஜ் உள்பட ரூ. 2.75 | செயற் பொறியாளர் பொதுப்பணித் துறை, காவிரி சீரமைக்கும் கோட்டம் மயிலாடுதுறை |

வேலை முடிக்கப்பட வேண்டிய கால அளவு 11 மாதங்கள்

1. ஒப்பந்தப் படிவம் எல். எஸ்.

2. அறிவிப்பில் கொடுக்கப்பட்டுள்ள வேலைக்கு இரண்டாம் வகுப்பு அதற்கு மேலும் பதிவு பெற்றுள்ள ஒப்பந்தக்காரர்கள் ஒப்பந்தப்புள்ளி கொடுக்க தகுதியுடையவராவார்கள். ஒப்பந்த அறிவிப்பில் குறிப்பிடப்பட்டுள்ள வகுப்பிற்கு நேர் கீழுள்ள வகுப்பில் பதிவு பெற்றுள்ள ஒப்பந்தக்காரர்களுக்கும், அவர்களது கோரிக்கையின் பேரில் ஒப்பந்தபபுள்ளி அட்டவணை கொடுக்கப்படும். ஆனால் அவர்களது ஒப்பந்தம் ஏற்கப்பட தகுதியுடையதாயின் ஒப்பந்த அறிவிப்பில் குறிப்பிட்டுள்ள வகுப்பிற்கு ஒப்பந்தக்காரர் பதிவு பெறத் தக்க நடவடிக்கையை இத்துறையால் எழுத்து மூலம் தெரிவிக்கப்பட்ட 15 நாட்களுக்குள் எடுக்கப்பட வேண்டும். அவ்வாறு நடவடிக்கை எடுக்கப்பட்டு சான்றிதழ் பெறப்படாவிடின் அவர்களது ஒப்பந்தப்புள்ளியை நிராகரிப்பதுடன் அவ்வேலைககு செலுத்தப்பட்ட முன்வைப்புத் தொகையும் பறிமுதல் செய்யப்படும்,

3. ஒப்பந்தப்புள்ளி அட்டவணைக்கான தொகையை செலுத்திய கருவூல ரசீதுடன் விண்ணப்பம் கொடுக்க கடைசிநாள் 13-6-83 அன்று மாலை 5 மணி வரையில்

4. ஒப்பந்தப்புள்ளி அட்டவணைகள் 30-5-83 முதல் 13-6-83 வரை அலுவலகத்தில் விற்பனைக்கு கிடைக்கும்.

5. மேலே குறிப்பிட்டுள்ள ஒப்பந்தபுள்ளி அட்டவணைத் தொகை அரசு கருவூலத்திலோ அல்லது பாரத ஸ்டேட் வங்கியிலோ செயற்பொறியாளர், காவிரி சீரமைப்புக் கோட்டம் மயிலாடுதுறையின் கணக்கில் '882-Cash remittance AC. P. W. remittance A. D. other remittance 882-RACAD 0000 என்ற கணக்கு தலைப்பின் கீழும் அதற்குரிய விற்பனை வரியை "Sales tax (b) receipts 040 Under Sales tax General Sales tax" என்ற கணக்கு தலைப்பிலும் செலுத்தவேண்டும்.

6. ஒப்பந்தப்புள்ளி அட்டவணை கோரி கொடுக்கப்படும் விண்ணப்பம் ஒப்பந்தப்புள்ளி அட்டவணைக்குரிய தொகையை செலுத்தியதற்கான ரசீது இணைக்கப்படாமலோ அல்லது 13-6-83 அன்று மாலை 5 மணிக்கு மேலோ பெறப்பட்டால் அவ்விண்ணப்பங்கள் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

7. ஒப்பந்தக்காரரின் கோரிக்கையின் பேரில் அஞ்சல் மூலமாக அனுப்பப்படும் ஒப்பந்தப் புள்ளி அட்டவணைகள் ஒப்பந்தக்காரருக்கு தாமதமாக கிடைத்தாலோ அல்லது தவறுதலாக கிடைக்காமல் போனாலோ கண்காணிப்புப் பொறியாளர், பொறுப்பாக மாட்டார்,

8. கோரப்பட்டுள்ள ஒப்பந்தப்புள்ளி அறிவிப்பை எந்த நேரத்திலும் காரணம் ஏதுமின்றி தள்ளுபடி செய்வதற்கோ அல்லது பெறப்படும் ஒப்பந்தப்புள்ளிகளில் எந்த ஒரு ஒப்பந்தபுள்ளியையாவது அல்லது எல்லா ஒப்பந்தப்புள்ளிகளையாவது நிராகரிக்கவோ கண்காணிப்புப் பொறியாளருக்கு அதிகாரம் உண்டு.

9. மேற்கொண்டு தேவைப்படும் விவரங்களை கண்காணிப்புப் பொறியாளர் காவிரி வளர்ச்சிப் பணிகள் வட்டம், தஞ்சாவூர் அலுவலகத்தில் அலுவலக நேரங்களில் நேரில தெரிந்து கொள்ளலாம்,

கண்காணிப்புப் பொறியாளர்

தஞ்சாவூர்

DIPR/2580/83 15/aspco

# முதல்வர் புரட்சித்தலைவருக்கு 157 அடி நீள வாழ்த்து மடல் எழுதிய வாலிபர்

சென்னை, மே 18— முதல்வர் புரட்சித் தலைவருக்கு தமிழக வாலிபர் ஒருவர் 157 அடி நீளமுள்ள வாழ்த்து கடிதத்தை அனுப்பியுள்ளார். உலக வரலாற்றில் ஒரு முதலமைச்சருக்கு வந்த மிகப்பெரிய கடிதமாகும் இது.

இந்தக்கடிதம் உலக சாதனை பட்டியலில் இடம்பெறக்கூடிய மிக முக்கியமான கடிதமாகும்.

இந்தக் கடிதம் எழுதிய வாலிபரின் பெயர் ரீகன் ஜோனஸ். இவர், அமெரிக்க இலக்கியத்திலும், ஆங்கிலத்திலும் இரண்டு மாஸ்டர் பட்டங்களைப் பெற்றுள்ளார்.

இவரது சொந்த ஊர் குமரிமாவட்டத்திலுள்ள செம்பருத்தி விளையாகும். தற்போது திருநெல்வேலி மாவட்டம் வண்ணார்பேட்டை அருகே கிராமபி என்ற இடத்தில் வசிக்கிறார். இவர் முதல்வர் புரட்சித் தலைவருக்கு 157 அடி நீளமும் 2½ அடி அகலமும் உள்ள மிகப்பெரிய வாழ்த்துக் கடிதத்தை எழுதி அனுப்பியுள்ளார்.

இது அமெரிக்க இலக்கியம், ஆங்கிலம், தமிழ் ஆகிய மொழிகளால் எழுதப்பட்டுள்ளது. அதில் மொத்தம் ஒரு லட்சத்து 30 ஆயிரம் எழுத்துக்கள் உள்ளன.

அதில் எழுதப்பட்டுள்ள ஒரு வார்த்தையில்மட்டும் 103 ஆங்கிலஎழுத்துக்கள் அடங்கிய மிக நீளமான ஒரு அமெரிக்க இலக்கிய வார்த்தை எழுதப்பட்டுள்ளது.

அந்த கடிதத்தில் அமெரிக்க ஜனாதிபதி ரீகன், முதல்வர் புரட்சித் தலைவர் ஆகியோரின் படங்கள் வரையப் பட்டுள்ளன. அதில்எழுதப்பட்டுள்ள எழுத்துக்கள் கண்களை கவரக்கூடிய வகையில் மிகவும் அழகாக எழுதப்பட்டுள்ளது.

தமிழக வரலாற்றில் ஒரு முதல்வருக்குவந்தமிகவும் பெரிய கடிதம் முதல்வர் புரட்சித் தலைவருக்கு வந்த இந்த 157 அடி நீள கடிதமாகும். எனவே இந்த பெரிய கடிதம் தமிழக வரலாற்றில் குறிப்பிடத்தக்க கடிதமாகும்.

அமெரிக்க ஜனாதிபதி ரீகனுக்கு 15 அடி நீளமுள்ள கடிதத்தை இந்த வாலிபர் அனுப்பி சானறிதழை பரிசாகப் பெற்றார்.

ரீகனுக்கு அனுப்பிய கடிதத்தைவிட 10மடங்கு பெரிய வாழ்த்து மடலை இப்போது முதல்வர் புரட்சித்தலைவருக்கு இவர் அனுப்பியுள்ளார்.

உலக வரலாற்றில் ஒரு முதலமைச்சருக்கு வந்த மிகப்பெரிய கடிதம், புரட்சித் தலைவருக்கு வந்த இந்த 157 அடி நீள கடிதம்தான், எனவே இந்த கடிதம் கின்னஸ் உலக சாதனைப் பட்டியலில் இடம்பெறக்கூடிய மிக முக்கிய கடிதமாகும்.

முதல்வர் புரட்சித் தலைவருக்கு இந்தகடிதம் அனுப்பிய தமிழக இளைஞர் ரீகன் ஜோன்ஸுக்கு தமிழக அரசு பாராட்டு தெரிவித்து கடிதம் அனுப்பியுள்ளது.

ரீகன் ஜோன்ஸுக்கு கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதாவும் பாராட்டு தெரிவித்து கடிதம் எழுதியுள்ளார்.

## எழுத்தாளர் பி.எஸ். ராமையா காலமானார்

சென்னை, மே 18— பிரபல எழுத்தாளர் பி. எஸ். ராமையா இன்று காலை காலமானார். அவருக்கு வயது 78.

மணிக்கொடி என்ற பத்திரிகையை நடத்தியவர் பி. எஸ். ராமையா ஆவார்.

ஏராளமான சிறு கதைகள் மற்றும் நாவல்கள் எழுதியவர் பி. எஸ். ராமையா அவருக்கு மனைவியும் 4 மகன்களும் 3 மகள்களும் உள்ளனர்.

சிங்கப்பூருக்கு கடத்த முயன்ற

## ரூ. 30 லட்சம் பாம்பு தோல்கள் பறிமுதல்

சென்னை, மே 18— சென்னையிலிருந்து ரூ. 30 லட்சம் மதிப்புள்ள பாம்பு தோல்களை சிங்கப்பூருக்கு கடத்த இருந்ததை சுங்க இலாகா அதிகாரிகள் கைப்பற்றினர். இந்த பாம்பு தோல்கள் 72 மரப் பெட்டிகளில் அடைக்கப்பட்டு இருந்தன. இந்த பாம்பு தோல்களை முகமது நூருதின் என்பவருக்கு அனுப்புவதாக இருந்தது. இது குறித்து சுங்க இலாகா அதிகாரிகள் கடத்தலில் ஈடுபட்ட நபர்களை தேடி வருகின்றனர்.

வறட்சி நிவாரணப் பணிகள்:

## தஞ்சை மாவட்டத்தில் தினம் 9 ஆயிரம் பேருக்கு வேலை

தஞ்சை, மே 18. தஞ்சை மாவட்டத்தில் வறட்சி நிவாரணப் பணிகளில் நாள்தோறும் 9 ஆயிரம் பேருக்கு வேலைவாய்ப்பு அளிக்கப் படுவதாக மாவட்டக் கலெக்டர் மெய்கண்ட தேவன் கூறினார்.

தஞ்சை மாவட்டக் கலெக்டர் மெய் கண்ட தேவன் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது:

தஞ்சை மாவட்டத்தில் வறட்சி நிவாரணப் பணிகள தீவிரமாக நடந்து வருகிறது.

மாவட்டத்தில் நடைபெறும் வறட்சி நிவாரணப்பணிகளில் மட்டும் நாளொன்றுக்கு 9 ஆயிரம் பேர்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்கப் படுகிறது.

கலைகளையும் கலைஞர்களையும் வளர்க்கும் வகையில் மாவட்டம் தோறும், மாவட்டக் கலெக்டரை தலைவராகக் கொண்ட குழு ஒன்றை அமைக்கும் திட்டம் ஆலோசனையில் உள்ளது.

இவ்வாறு கலெக்டர் மெய்கண்ட தேவன் கூறினார்.

## ரஷ்யாவில் இரட்டைத்தலை பாம்பு

மாஸ்கோ, மே. 18— ரஷ்யாவில் உள்ள மிகப் பெரிய விலங்கியல் அருங்காட்சியகத்தில் இரட்டை தலை பாம்பு ஒன்று உள்ளது.

இந்தபாம்பின் இரண்டு தலைகளிலும் உள்ள உறுப்புகள் வழக்கம் போல் செயல்படுகின்றன

இந்த பாம்பின் ஒரு தலையில் உள்ள வாய் திறந்து உணவு அருந்தும் போது மற்றொரு தலையில் உள்ள வாய் மூடிக் கொள்கிறதாம்.

பிள்ளைப்பாக்கத்தில்

## மண் சரிந்து 5 பேர் சாவு

காஞ்சிபுரம், மே 18— காஞ்சிபுரம் அருகே உள்ள பிள்ளைப்பாக்கம் கிராமத்தில் மண் சரிந்து 5 பேர் புதையுண்டு மரணம் அடைந்தனர்.

கிணற்றைதூர் வாரி ஆழப்படுத்தும் பணியில் இருந்தபோது திடீரென்று மண் சரிந்து விட்டது. உள்ளே இருந்த 5 பேர் புதையுண்டனர்.

தீயணைப்பு படையினர் வந்து இறந்தவர்களது உடல்களை மீட்க முற்பட்டனர்.

## பட்டுமாங்காட்டில் கழகக் கூட்டம்

நாள்: 19—5—83 வியாழன் மாலை 7 மணி

இடம்: பட்டுமாங்காடு

தலைமை: பழனி முன்னிலை: சேக்தாவூது வரவேற்புரை: நூர் நல்லா

பேசுவோர்: ஜேப்பியார் எம். எல். சி., என். வி. என். செல்வம், அப்துல் ரசாக், கு. க. செல்வம், தி. நகர் மூர்த்தி, ஜெகநாதன். சம்பந்தம் பிள்ளைப்பாக்கம் மூர்த்தி, பா. சிதம்பரம் தயாளன் மற்றும் பலர். நன்றியுரை முகமது ரசாக்.

சென்னை நகரில்

## ஐ.ஓ.பி. வங்கியில் ரூ. 90 ஆயிரம் மறைந்த மாயம்

சென்னை, மே 18. சென்னை நகரில் இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில் ரூ 90 ஆயிரம் திடீரென்று மாயமாக மறைந்து விட்டதாம்,

கதீட்ரல் ரோடு பிராஞ்சில் இந்த சம்பவம் நடந்துள்ளது.

சென்னைகதீட்ரல்ரோடு இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில் இருந்து ரூ. 90 ஆயிரம் காணாமல் போய் விட்டதாம்.

காணாமல் போனது ரூ. 90 ஆயிரம் என்று அந்த வங்கியின் மானேஜர் தெரிவித்துள்ளார்.

ஆனால் இன்னும்அதிகமாக காணாமல் போயிருக்கும் என்று அந்தவங்கி ஊழியர்கள் சொல்லுகின்றனர்.

இந்தப்பணம் எப்படி மாயமாய் மறைந்திருக்கும் என்பது விசாரிக்கப் படுகிறது.

### மறைந்த காரணம் என்ன

வங்கிக்குள் இருப்பவர்களால் தான் இதைச் செய்து இருக்க முடியும் என்று கருதப்படுகிறது.

சில நாட்களுக்கு முன்பு இதே வங்கியில் இருந்து சிலலட்சம் மதிப்புள்ள பொருட்கள் காணாமல் போயிருக்கிறதாம் அதுவும் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை.

இப்படி பணம் காணாமல் போனதற்கு வங்கி ஊழியர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணம் சொல்லி வருகிறார்கள்.

## இலங்கையில் அவசர நிலைமை

கொழும்பு, மே 18— இலங்கையில் இன்றுமுதல் அவசர நிலைமை அமுலுக்கு வருகிறது. அங்கு நாடாளுமன்றதேர்தலும் உள்ளாட்சித் தேர்தலும் இன்று நடக்கின்றன.

தேர்தல் கலவரத்தை தடுக்க இந்த நடவடிக்கையை அரசு மேற்கொண்டுள்ளது.

நீலகிரி மாவட்டத்தில்

## அரசு அலுவலகங்கள்: 21-ந்தேதி விடுமுறை

உதகை, மே 18— உதகையில் மே 21ந் தேதி வருடாந்திர மலர் மற்றும் பழக்கண்காட்சி நடைபெற உள்ளது தெரிந்ததே.

இதை ஒட்டி நீலகிரி மாவட்டத்தில் உள்ள அரசு அலுவலகங்களுக்கு 21-ந் தேதி விடுமுறையாகும்.

இதற்குப் பதிலாக ஜூன் 17-ந் தேதி நீலகிரி மாவட்டத்தில் அரசு அலுவலகங்களுக்கு வேலை நாளாக இருக்கும் என அறிவிக்கப்பட்டுள்ளது.